உ

குருபாதம்

# திருநாவுக்கரசர் பதிற்றுப்பத்தந்தாதி



## திருவண்ணாமலை ஆதீனம்

குன்றக்குடி.

உ

குருபாதம்

திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசர் பதிற்றுப் பத்தந்தாதி



இந்நூல்

திருக்கயிலாயபரம்பரை, குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம்

சச-வது மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி ஆறுமுக தேசிக பரமாசாரிய சுவாமிகளவர்களின்

திருவுள்ளப் பாங்கின் வண்ணம்

வெளியிடப்பெற்றது

ஆக்கியோன்:

திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம்

நந்தன

1952

உ

குருபாதம்

# தோற்றுவாய்

"திருநாவுக்கரசர் பதிற்றுப் பத்தந்தாதி" என்னும் பெயரிய இந்நூல் ஆயிரத்துத் தொளாயிரத்து நாற்பத் தொன்பதாம் ஆண்டின் இடையில் திருவருட்டுணையால் யாக்கப் பெற்றதாகும். குன்றக்குடிக் குமரனின் குளிர்ந்த அருள் நோக்கால் இன்றைக்கு இந்நூல் வெளியிடப் பெறுகிறது. **திருக்கயிலாய பரம்பரை திருவண்ணாமலை ஆதீனத்தின் 44-வது பட்டமாகக் குன்றக்குடியில் எழுந்தருளியிருந்து ஞானச் செங்கோல் ஓச்சி நாளும் சைவம் புரக்கும் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி ஆறுமுக தேசிக பரமாசாரிய சுவாமிகளவர்களும், சின்னப்பட்டம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக சுவாமிகள் அவர்களும் இந்நூலின் வெளியீட் டிற்குச் செய்த பேருதவிக்காக அடியேனது அன்புகலந்த நன்றி உரித்தாகுக.**

திருநாவுக்கரசரது திருநட்சத்திரத் திருநாளாகிய இன்று, அப்பெருமானுக்கு அருள் வழங்கப் பெற்ற அருந்தலமாகிய திருவதிகை வீரட்டானத்தில் இந்நூல் அரங்கேற்றப்பெற்று அவர் திருவடிக் காணிக்கையாகச் செலுத்தப் பெற்ற பெரும்பேற்றிற்காக யான் மன மாரத் திருவருளை வாழ்த்துகிறேன்.

இங்ஙனம்,
திருவாசகமணி

திருவதிகைவீரட்டானம்,
20—4—52.
நந்தன ஆண்டு
சித்திரைச் சதயம்

ஓம்

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசர் பதிற்றுப்பத்தந்தாதி

1 சீர்மலிந்த முனைப்பாடித் திருமலிந்த வூர்மலிந்த திருவாமூரில்
தார்மலிந்த பெரும்புகழ் தாமணந்த மாதினியின் தவத்தின்சேயாய்ப்
பேர்மலிந்த மருள்நீக்கிப் பேருடனே பீடுறமுன் பிறங்கிப்பின்னர்
பார்மலிந்த சைவமதைப் பாமலிந்த நாவரசாய்ப் பாலித்தோனே.

2 பாலிருந்தும் புளித்திடுமோர் பழங்கஞ்சி பருகிடுவார் பான்மைத் தாய்மேல்
நூலிருந்தும் இழிகுணத்தின் நூல்கள்தமை விரும்பிநிதம் நுகர்வார்போன்று
மேலிருந்த மறைகளினும் மிகவுயர்ந்த நின்தமிழ்த்தேன் மேவாதோடி
மாலிருந்த மொழிபயில்வார் பாலிருந்த எனையாள்நா மன்னுபோற்றி.

3 போற்றியருந் தெய்வமுனைப் போற்றிடுமென் வயிறதனிற் புகுந்த கூற்றை
மாற்றியருள் செய்கவென மாற்றலரின் புரமெரித்த மன்னன்மீது
சாற்றியருந் தமிழ்மாலை தனையடைந்த கொடுஞ்சூலை தவிர்த்துநாளும்
நாற்றிசையும் மகிழ்ந்துநனி போற்றிடுநல் நாவரசே எங்கள் நாதன்.

4 நாதாந்தம் தனிற்றிகழும் நம்பரனுர் திருவருளை நண்ணித்தேனின்
வேதாந்தம் தனிற்றிகழும் விழுப்பொருளின் சித்தாந்தம் விரும்பிப் பாடிப்
போதாந்தத் தலைவரெனப் புவிக்கரசும் கவிக்கரசும் புகழும்வண்ணம்
காதார்ந்த குழையரனுர் கழலார்ந்த திருநாவுக் கரசரேறே.

5 அரசனெனில் திருநாவுக் கரசொருவன் தானேயாம் அகிலமெல்லாம்
பிரசமலர் எனிற்பேசும் பீடுறுதா மரையாகும் பெற்றிபோலே;
பரசமய மதுநீங்கிப் பணிசமயத் துழவாரப் படைகள் தாங்கிச்
சிரசதனில் நல்லூரிற் சிவன்கழல்கள் தாங்கிய நற்சொல்லின் செல்வா.

6 செல்வமதிற் சிறந்ததுநற் சிற்சபையோன் கழலேத்தும் செல்வம் என்றே
சொல்மதலைச் சிவஞானம் துய்த்தபிரான் தூவடியே தொழுதுநாளும்
பல்வளமும் செறிந்துவளர் பரசிவனின் தலங்கள்தொறும்பணிந்து பாடி
வில்வமுடன் கொன்றைமலர் விரும்பரனின் மென்மலர்த்தாள் விரும்பினேனே.

7 விரும்புகின்ற அடியவர்கள் வேண்டுகின்ற வரமளிக்கும் வேதன்பாகக்
கரும்புருவச் சிலையுமையாள் கறந்தளித்த பாலதனைக் கனிந்திட்டுண்ட
அரும்புகலிக் குழவி "என தப்பர்" என அணைந்தெடுத்த அருமைவாய்ந்த
பெரும்புகழின் மொழிக்கரசைப் பேசாதார் இவ்வுலகிற் பிறவாதாரே.

8 பிறவாமை என்றவரம் பெறநாடும் மாந்தர்சிவன் பேரையாண்டும்
மறவாமை எனுவிரதம் மனமாரக் கொள்ளுதலும் மரபென்போனே.
திறவாமை கொண்டதொரு திருமறைக்கான் கதவமதைத் திறக்கப் பாடி
இறவாத இன்பநுகர் எழில்நாவுக்கிறைவ எங்கள் இனியகோவே.

9 கோவினுக்கும் உலகுடைய கொற்றவர்க்கும் குடியல்லோம் என்று கூறி
நாவினுக்கோர் அருங்கலமாம் நமசிவய எனுநாமம் நயந்துசூடும்
தேவினுக்கோர் அருங்கலமாம் திருத்தாண்டகம் புனைந்து தெவிட்டாத் தேனின்
பாவினுக்கோர் அருங்கலமாம் பாட்டிசைத்த சொல்லிறைவா பணிந்திட்டேனே.

10 பணிசெய்தல் என்கடனொம் பரமனுக்கென் றுழவாரப் படைகள் தாங்கி
அணிசெய்து திருக்கோயில் அரன்செய்ய பாதமலர் ஆர்ந்தென்னுளும்
மணிசெய்த நேரிசையாம் மாலைதனைச் செந்தமிழால் மகிழ்ந்துசூட்டிப்
பிணிசெய்த பவநீங்கிப் பிஞ்ஞகனருள் சேரரசைப் பேணிவாழ்வாம்.

## வேறு.

11 வாழ்வதை வையந்தன்னில் வஞ்சனை மிகுத்திட்டென்றும்
தாழ்வதைத் தையலார்தம் தாளிணைத் தஞ்சம்நாடிச்
சூழ்வதைத் துயரம்சார்ந்த சுடுநரகதனிற் சோர்ந்து
வீழ்வதைப் புரிந்தேன் நாவின் வேந்தரைப் புகழ்ந்திலேனே.

12 புகழ்ந்திடற் குன்னையல்லால் பொருளது பிறிதொன்றுண்டோ?
அகழ்ந்தவர்த் தாங்கும்பூமி அன்னையே என்ன வோங்கித்
திகழ்ந்திடும் பொறுமைத்தேவே செஞ்சொலின் வேந்தேஎன்னை
இகழ்ந்திடல் செய்யாதுன்றன் இன்னருள் பாலிப்பாயே.

13 பாய்விடைப் பாகன் தாட்கே பணிவிடையாற்றும் பாங்கோய்,
தோய்விடப் பாலின் சோற்றைத் துணிவுடன் மிசைந்திட்டோய்க்குத்
தாய்விடச் சென்றுவாழை தனையறுத் தரவால்வீந்த
சேய்விடம் தீர்த்தல்நாவின் தேவனே அரியதேயோ?

14 தேயத்தார் பரவியேத்தும் திருவையா றமர்ந்த தேனை
நேயத்தால் நினைந்த நெஞ்சம் நீங்கலா நிலைமைதன்னை
மாயத்தால் அழியும்நாயேன் மாநிலத்தடைதல் செய்யாய்
காயத்தால் தொண்டுசெய்த கவின்சொலின் அரசரேறே.

15 ஏறலால் ஏறலில்லை எரியலால் உருவமில்லை
நீறலால் நிதியுமில்லை நெஞ்சலாற் கோயிலில்லை
ஆறலால் அணியுமில்லை ஐயன் ஐயாறர்க்கென்றே
கூறலால் உனையலாலோர் குருவிலேன் நாவின்கோவே.

16 கோவணம் அரையிற் கூட்டிக் கொன்றையைச் சடையிற்காட்டித்
தீ வண மேனிச் செல்வன் திரிபுரம் எரித்த தேவன்
பூ வணம் அதனிற் காட்டும் பொற்புறு வண்ணம் யாவும்
பாவணம் அதனிற் காட்டும் பனி மொழி யரசே காவாய்.

17 காவிரி யாடிற்றுனேன் கங்கை நீராடிற்றுனேன்
மாவடு வகிரின் கண்ணி மங்கையோர் பாகம் வைத்த
கோவினைக் கூடிப்பாடும் குறைவில் அன் பில்லார் என்றே
நாவினுக் கரசேநீதான் நயம்பட உரைத்தாய் நன்றே.

18 "நன்றுநீ உகப்பாய்கச்சி நாதனே புளிவாய் என்னை"
என்றுநீ இசைத்த பாடல் இறைபணி நிற்கும் ஏமம்
ஒன்றினை விளக்கும் உண்மை உணர்ந்தனன் ஏழையேன்யான்
வென்றனன் விதியை நாவின் வேந்தனே விழைந்தேன் நின் தாள்.

19 தாளலாற் றுணையுமில்லை சகமலா தடிமையில்லை
கேளலால் உடையுமில்லை கிரியலால் உரிமையில்லை
ஆளலாற் கைம் மாறில்லை ஐயன் ஐயாறர்க் கென்றே
நாளெலாம் நவின்றநாவின் நாத நின் நலங்கண்டேனே.

20 கண்டறிந் துணரவொண்ணுக் காட்சிகள் கண்டாய் முன்னம்
பண்டறிந் திருவர் காணுப் பரமனார் பாதத் தேனை
உண்டிருந் தன்னுள் தீங்கை ஓட்டிய உரையின் வேந்தே
பெண்டிரும் பொன்னும் பேணுப் பெருமிதம் பெருக வாழ்ந்தாய்.

## வேறு

21 தாயினுஞ்சாலப் பரிந்துநின் பாலன்பு தாங்கியுன்றன்
தூயநற் கோலமார் வீட்டினுக் கோர்விளக் காயதொன்மை
நேயமார் தேவியாம் நின்தமக் கைக்கெதிர் நீணிலத்தே
தேயமாம் எங்கணும் இல்லையென்பார் சொலின் தேவகேளே.

22 கேள்வர்தம் இன்னுயிர் நீத்தார்எனும் செய்தி கேட்டபோதே
மாள்வதே சால்பென்ற மாதினித் தாயின் மகன்எனத்தான்
நீள்வதாம் கீர்த்திதான் நின்னதே என்று நினைந்தவென்னை
ஆள்வதே நின்றன் அருங்கடன் காண்திரு நாவரசே.

23 காணக்கண் கூசும் கயிலாய நாயகன் காட்சிதன்னைப்
பேணக்கி டைப்பினல் லால்மீளல் இல்லெனப் பேசியுந்தன்
ஊனுக்க ழும்உடல் தோல்தேய ஊக்கமோ டூர்ந்துசென்று
மாணிக்க வல்லியோ டையாறனைக் கண்ட மாமன்னனே.

24 மன்னென் றெவரையும் யானென்றும் ஏத்திலன் மாநிலத்தே
பொன்னென் றொருபொருள் யாண்டுமே கொண்டிலன் போற்றுதற்கே
மின்னென் றிடுமிடை ஏழைஎன் செய்வர்என் மேலென்றுமே
முன்னன் றுரைத்திட்ட வீரர்கட் கேறே மொழிக்கு வேந்தே.

25 வேந்திடை யானென் உடையன்மற் றோர்பொருள் வேண்டகில்லேன்
போந்திடை யாத்திரு ஏந்திடுவானெங்கள் புண்ணியன் நற்
சாந்துடை யான்திருத் தாளடை வாகும் தனிச்சுவைத்தேன்
மாந்திடு வேன்எனும் நாமன்ன நின்றொண்டெனக்கு வாழ்வே.

26 வாழ்வே தமிழ்க்கண் மணியேஎன் உள்ள மணிவிளக்கே
தாழ்வேது மின்றிநற் சைவம் தழைத்திடத் தாரணியில்
ஆழ் வேலை தாண்டிமுன் கன்மிதப்பிற் கரை யார்ந்த நின்னைப்
பாழ் வே தனைப்படும் யானடைந் தேன் சரண் பாமன்னனே.

27 ஏதமில் லாவணம் திவிடம் ஏற்றுமுன் ஏந்தியுண்டாய்
ஆதலின் நீலமார் கண்டன் ஒப்பாய் என் றறிந்தடைந்தேன்;
நாதனோர் பெண்வயின் நாடிநின் றூகை நாவின்மன்ன
நீதனிச் சிருளாய் நெஞ்சிலும் பெண்ணை நீ நேடிடாயே.

28 நேடும் படிக்குன் அடியே திருவருள் நீயளிப்பாய்
பாடும் படிக்குன் புகழோதி இன்புறப் பாங்கினருள்
கூடும் படிக்குநான் நாடிநின் றேன் மொழிக் கோவெனத்தான்
ஆடும் பதத்தினன் தானன் றழைத்த அன் பார்ந்தவேந்தே.

29 அன்பின் கடலென் றருண்மொழித் தேவர் அருளிய சொல்
இன்பின் சுவைதனை இன்றியான் கண்டிறும் பூதெய்தினேன்
துன்பின் விரிகடல் நீந்தநின் தாளாம் துணையருள்வாய்
என்பின் பணியணி ஈசனுர்க் கேற்ற சொல் எழில் இறையே.

30 இறையவன் ஈசன் திருமறைக் காட்டில் இயல் நலத்தை
முறையினிற் கண்டு வணங்கநீ அன்று மொழிந்த தமிழ்
மறையெனும் பேற்றுல் கதவடை காப்பினை மாற்றியவா
சிறைதவிர்த் தாளும் சிவன்மகிழ் நாவின் திருத்தேவனே.

## வேறு

31 தேவர்கட்கரி தாகிய தெய்வமாய்
மூவர்கட்கரி தாகிய மூர்த்தியாய்
யாவர்க்கும்அரி தாகிய ஆதியை
நாவிற்கே இறை யாகுநீ நண்ணினய்

32 நண்ணினர்க்கருள் நல்கிடும் நாதனை
எண்ணினர்க்கின்பம் ஈந்திடும் ஈசனை
கண்ணினுற்கழல் காண்பிடம் நெஞ்செனப்
பண்ணினுல் தமிழ் மன்னநீ பாடினய்.

33 பாடமா நடம் ஆடும் பரமனை
மாட மாளிகை மாமதில் தில்லையில்
கூடு வார்தமக் கேகொடுக்கும் அருள்
நாடவே செலும் நாவினுக் கீசனே.

34 ஈசன் எம்பெரு மானிடை மருதினில்
நேசனைக் கனி கரும்புபெண் நீண்முடித்
தேசினும் இனி யன் எனத் தீந்தமிழ்
பேசு நாவினுக் கிறைவ என் பேசுகேன்?

35 பேசும் போதினும் பேசிடற்கின்றிவாய்
கூசும் போதினும் குந்திடும் போதினும்
பூசும் சாம்பரின் பூம்புகல் ஊரனை
நேசம் வைத்தெனும் நீண்மொழி நாதனே.

36 நாதனை நல்ல நான்மறை யோதியை
வேதனை எழில் வீணைவா சித்திடும்
கீதனை நிதம் கிளந்தநா விற்கிறைப்
போதனேயுனைப் போற்றினன் புலையனேன்.

37 புலைய ராயினும் பொய்யரே யாயினும்
நிலைதி ரிந்திடா நேர்மையில் நினைவரேல்
மலையன் மாமகள் பாகனார் மகிழ்ந்தருள்
இலையெனா தளிக்கும் எனும் எந்தையே.

38 எந்த மாதவம் செய்தனை நெஞ்சமே
இந்த வாறுநீ இனியநா விற்கிறை
எந்தையைப் பணிந் தின்புறச் செந்தமிழ்ச்
சந்த மாலையைச் சாத்தியும் பாடவே.

39 வேதம் ஓதில ராயினும் மேன்மை நூல்
ஏதும் ஒன்றும் அறிகிலராயினும்
ஓதியஞ் செழுத் துணர்பவர்க் கருளுவர்
நாதர் என்றனை நாவினுக் கரசனே.

40 ஏதுசொல்லுவ ராகிலும் ஏழைகள்
யாதோர் தேவர் எனப்படுவார்க் கெலாம்
மாதே வன்னலால் தேவர் மற்றின்றெனும்
போதம் ஓர்ந்தனன் நாவிறைப் புனிதனே.

## வேறு

41 புனிதனைப் புண்ணிய மூர்த்தியைப் பொழில்சூழ் பூவனூர்
அரன்தனைப் போற்றும்
மனிதரே உலகில் தலைமையார் மாண்பின் மனிதராம் என்றநா மன்ன
கனிதனைப் பெறில்நீர் காதலால் உண்பிரோ காசினி யீர்எனக் கடாவி
இனிதருட் போதம் ஈந்தநின் எழிலை எங்ஙனம் இயம்புதல் இயலும்!

42 இயலுமா றெல்லாம் எம்மினும் இனிய இன்னம்பர் ஈசனை ஏத்திப்
பயிலுமா றருள்செய் பண்பமர் நாவின் பரமனே நின்னருட் பாடல்
குயிலுடன் கிளியும் கொங்குசேர் பொழிலிற் கூவியே முத்தியைக் கூடும்
செயலினைக் கண்டும் சிறியனேன் அதனைச் செப்பிடா திருப்பதும்
சீரோ?

43 சீருடன் சிவன்ருள் சேவித்து மாமலர் சிந்திநின் றேத்துவார் சிறப்பும்
பாரிடைப் பொழுதைப் பாவியாய்ப் புறக்கணிப் பார்களின் தாழ்வுமே
பதிந்து
ஏருடைச் செல்வனெம் இன்னம்பர் ஈசன் கீழ்க்கணக் கெழுதிடும்
இயல்பை
நாருடைச் செஞ்சொலின் நற்குறுந்தொகையால் நாவினுக் கரசநீ
நவின்றாய்.

44 ஆய்மலர் எடுத்திட் டணிதிகழ் மாலைகள் அன்பினில் தொடுத்திறை அரன்தாள்
தோய்தரும் உளத்தாற் சூட்டிடும் தொன்மைத் தொண்டர்தம் தூயநற் றுணைத்தாள்
சேய் எனும் எனக்கும் சிறந்தநற் புணையாய்ச் சேர்ந்திடற் கருள்தனைச் செய்யாய்
வாய் தனுக் குயர்ந்த வண்மையார் மன்ன்நின் வார்கழல் வாழ்த்துவார் வாழ்வார்

45 வார்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய் வந்தெனக் கின்னருள் வழங்கிக்
கார் கடல் எனுந்தாய் கருவினில் அடியன்எக் காலமும் கவிழ்ந்திடாக் கதியை
ஓர்கடல் அதன்மேல் ஓதியஞ்செழுத்தை உயர்ந்தநல்லுரையின் நற்கோவே
சோர்வுடன் திரியும் தொல்வினைப் பாவியேன் சுகம்பெறத் தந்தருள் துணைவா.

46 துணையெனக் கீண்டோர் துரும்பு மேஇலை சுற்றமும் நட்பும்சூ னியமே
அணைதரும் போகமோ டரிவையும் பொன்னும் ஆற்றில்மண் குதிரையென் றறிந்தேன்
புணையெனக் கல்லையும் பொங்குமாகடலில் போக்குவாக்கிறையெனும் புனிதன்
இணைமலர்த் தாளெனக் கிரும்பிறவிக் கடற் கேற்றநற் புணையென இருந்தேன்.

47 இருந்தநல் வீடும் எழிற்குளம் காவும் எண்ணில்பல் சராசரம் எல்லாம்
அருந்தவச் சேய ரவருடன் அளவில் அன்பநின் அருட்பெயர் அணிந்தே
பொருந்திய காட்சி வழங்குமப் பூதிப் புண்ணியக் கொழுந்தெனும் புனிதர்
தருந்திருச் சைவத் தவநெறிக் கடியேன் சார்வதென்னாள் மொழித்தலைவா ?

48 தலைதனைத் தலைவன் தாளிணைவணங்கச் சாற்றியும் தகைமைசால் நயனம்
அலைகடல் நஞ்சை அருந்தினோன்மேனி அழகினைக் காணவே அழைத்தும்
நிலைபெறும் நெஞ்சை நின்மலன்நாமம் நினைந்திடக் கூவியும் நீதான்
விலையிலாச் சைவ விதியினைவிளம்பி விதித்தனை விரும்பி நாவேந்தே

49 வேந்தனின் ஆணை விதிப்படி விடுத்தவெந் நீற்றரை தன்னிலே வேனில்
மாந்திமுன் மாயா மறைமொழிக் கிறைநின் மாண்பருள் யான்பெறில்
மண்மேல்
காய்ந்திடும் என்றன் கவலைசார் இல்லம் கவின்பெறும் பொழில்
எனக்காட்சி
ஈந்திடும் எனத்தான் இருந்தனன் ஏழையேற் கருளநீ இனிதுளம்
இரங்காய்.

50 இரங்கிடும் மனமும் எழிலமர் ஈசனை ஏத்திய இணைக்கரம் இரண்டோ
டரம்கிளர்ந் தொளிரும் அழகமர்உழவா ரப்படையவையுடன் ஆடிப்
பரன்கிளர் கோயில் பலவுமே சென்று பாடியும் பரவியும் பண்பால்
சிரங்கவிழ்ந் தேத்திச் செல்வனின் திருத்தாள் சேர்ந்தசொற்
கோவெனும் தேவே.

## வேறு

51 தேவே திளைப்பரிய தேனமுதே செங்கரும்பே
நாவே உரைப்பரிய நற்றமிழ்நா மன்னவனே
மூவேலிலைச்சூல முத்திரைகொள் உத்தமனே
பாவே இசைத்தடியேன் பாடஅருளே தருவாய்.

52 தருவாய்என் உள்ளமிசை தான்வளரும் கற்பகமே
குருவாய் எனைச் சிவன்பாற் கூட்டுகின்ற நற்கோவே
உருவாய நின்னெழிலார் ஓவியத்தை உள்ளடைத்தே
திருவாயின் சொல்லரசே தேக்கியும்பே றின்பமுற்றேன்.

53 உற்றார்கள் இல்லேன் உயிர்கொண்டு போம்பொழுதே
குற்றாலங் தன்னிலுறை கூத்தனலால் என்றறிந்தும்
பற்றாய சுற்றமதைப் பற்றிநிற்கும் பாவியனேன்
சற்றாகிலும் பிழைக்கத் தானருளாய் நாவரசே.

54 சேர்ந்தறியாக் கையான் சிவபெருமான் தாளல்லால்
ஓர்ந்தறியா உத்தமச்சேய் ஓடிவந்தே 'அப்பர்'என
ஆர்ந்துமலர்க் கைகளினால் அன்றெடுத்தே நன்றழைத்த
கூர்ந்தமதிச் சொல்லரசே கூடிடுமோ நின்னருளே?

55 அருளார்ந்த செஞ்சடையின் அம்மானுக் காளாகித்
தெருளார்ந்த மெய்ஞ்ஞானம் தேற்றுகின்ற வாக்கிறைவா
மருளார்ந்த வல்வினையால் வன்பிணியால் வன்துயரால்
இருளார்ந்த நெஞ்சுடையேன் என்செய்கேன் எங்குய்வேன்?

56 உய்வதற்கு நீமுன்னம் ஓயாது தான் கவன்ற
செய்தவத்துச் செல்வி திலகவதித் தேவியரோ
மெய்வதைத்துன் கூற்றெனவே மேவியவெஞ் சூலையதோ
கைகொடுத்த நற்றுணையாம் காதன்மொழிக் கோன்கழறாய்.

57 கழகமதிற் செம்புலவோர் காலமெலாம் ஆய்ந்தறிந்து
பழகவரும் பைந்தமிழால் பண்ணமைந்த பாடல்தமைக்
குழகனுறை கோயில்தொறும் கூடியும்யான் பாடிடவே
அழதுமிகு நாவிறையே ஆசையுடையேன் அடியேன்.

58 அடியேனைத் தாங்கிடுதல் அம்மானே நின்கடனும்
'பொடியேனென் நேர்கடனுன் பொற்பாதப் பணிபுரிதல்
துடியேறும் மெல்லிடையாள் தோன்றியொளிர் பாகன்எனப்
படியேறும் தீந்தமிழைப் பாடியநா விற்கிறைவா.

59 இறையாகும் சம்பந்தர் ஏறிவரும் வெண்சிவிகை
மறைவாகத் தாங்கிமுனம் மாமொழிநா மன்னவநீ
'நிறைவாகும் நற்றவன்யான் நீளுலகில்' என்று,குறள்
'குறைவாகும் தாங்கல்' எனும் கூற்றினையே மாற்றினையால்.

60 மாற்றறியாச் செம்பொன்னே மாமணியே மரகதமே
கூற்றறியாக் கோமகனே கோமளமே தூய்மைமிகும்
நீற்றழகார் திருமேனி நிகரறியா நின்மலனே
ஆற்றழகார் செஞ்சடையாற் கன்புடைநா மன்னாவோ.

## வேறு

61 ஓதும் மெய்யாம் உழவதனை ஊன்றிச்செய்தே விருப்பென்னும்
தீதில்வித்தை விதைத்துப்பொய்ச் செயலாம் களையைத் தீய்த்திட்டே
கோதிற் பொறையாம் நீர்பாய்ச்சிக் குணமார் தகவாம் வேலியிடின்
நாதன் சிவமாம் கதிவிளையும் நாடீர் என்றாய் நாமன்னா.

62 மன்னும் வீழி மிழலையமர் வள்ளல் நினக்கே மகிழ்ந்தன்று
பொன்னின் காசு வாசியிலாப் பொற்போடளித்த புகழதனால்
பன்னும் தூய்மை மெய்த்தொண்டின் பான்மையறிந்தார் பாருள்ளார்
என்னும் மகிழ்வால் யானிறும்பூ தெய்திட்டேன் சொல் இறையவனே.

63 ஏதம் விளைப்பர் சமணரவர் இயையும் கோள்கள் இன்னாவாம்
தீதர் நிறைந்த மதுரைசெலல் தீங்காம் பிள்ளாய் தேர்ந்திடெனா
வேதம் மொழிந்த வித்தகனை விரைந்தே நீதான் தடுத்ததுவும்
காதல் மனத்தின் கவின்குறியாம் கண்டோம் நாவின் காவலனே.

64 காவல்புரிந்தே காசினியைக் காக்கும் வேந்தர் கனன்றாலென் ?
மேவும் மழைதான் மிகத்தப்பி விரியும் கடல்சூழ் மேதினிதான்
தாவும் விதமே கம்பித்தென் ? தயங்கோம் அஞ்சோம் சற்றுமெனக்
கோவாம் சிவனார் குடிமையினால் கூறும் வேந்தே குறைவில்லாய்.

65 வில்லார் நுதலாள் வேய்த்தோளாள் விரும்பும் ஈசன்
விரைமலர்த்தாள்
சொல்லால் மலரால் தொழுதேத்தித் தோயும் மனத்தின்
தொண்டர்களே
வல்லார், உலகில் மற்றையவர் வாடிப் பாடி காவலிலே
பொல்லார் எனவே பொன்றும் எனப் புகலும் நாவின் பொற்பரசே.

66 பொற்பார் உடலிற் பொடிநீறே பூசிப்பொலிந்த புண்ணியனே
கற்பார் உளத்தே காதலுறக் கண்டேயனைய கவிபொழிவாய்
நிற்பார் உலகில் நின்றிடுக நில்லோம் இனியிந் நீளுலகில்
வெற்பான் மருகன் தாளடைவான் விரைவோம் என்றாய் சொல்
வேந்தே

67 வேந்தே மொழியின் வேந்தேநின் வீரம்செறிந்த வேதமொழி
மாந்தார் உலகில் மாண்டேகி மற்றும் தோன்றி மறைந்திடுவர்
தீந் தேனமுதத் திருவருளைத் தேக்கித் திளைத்தே செம்மாந்து
போந்தேன் உனது பொன்னடியாம் புகலே பிறிதோர் போக்குமிலேன்.

68 போக்கொன்றில்லேன் பூமியிலே புனிதா நின்றாள் புகழ்ந்தோதும்
வாக்கொன்றில்லேன் மௌனமிலேன் வையம் சிவமாம் வகைகாணும்
நோக்கொன்றில்லேன் நுண்ணறிவால் நுகர்தல் இல்லேன்
நோன்புமிலேன்
நாக்கொன்றதனின் நல்லிறைவா நான்ஏன் பிறந்தேன் நவில்வாயே.

69 வாயாலுரைத்துன் வார்கழலை வாழ்த்திப்பணியா வன்மையர்கள்
தாயாம் உலகு தாங்கிடவே சகியாப் பொறையாம் தன்மையாம்
நாயாய்த்திரிந்து ஞாலமெலாம் நானும் சலித்தேன் ஞானமிலேன்
ஓயாதழுதால் உய்வுண்டோ உரையாய் நாவின் அரையா நீ.

70 நீடும்புகழார் நின்மலனாய் நிகரில் ஒளிசேர் நீள்சபையில்
ஆடும் அழகார் அம்பலவன் அருளார்கூத்தை யன்புடனே
பாடும் பரிசே பாவியனும் பன்னாள் மனதிற் பாவித்தேன்
கூடும் அருளார் குருவே என் குறைதீர்த்தாள்வா யின்கோவே.

## வேறு

71 வேதமோதிடும் விமலனார்சிவன்
பாதமே பணி பரமனே குரு
நாதனே மொழி நவிலு நாயகா
ஓதவே உனை உவகையாயினேன்.

72 ஆயினேனுனக் கடிமை யாகவே
செயினேனுரை சிறிய பாடலைத்
தாயினோர் உரைத் தலைவ நீயுமே
நேயமாய் மனம் நெகிழ ஏற்றிடாய்.

73 ஆயநீள்குலத் தழகின் மாயனும்
தூய தாமரைத் துலங்குவோனுமுன்
போயயர்ந்துருப் புரியொணான்உனை
'வாயின் நாதவாழ் வாய்' என்றனரோ.

74 ஓல மாகடல் உமிழும் தீயெனும்
ஆலமாமதை அமைதியோடுணும்
சீல மாமதைச் சிறியனேற்கு நீ
கோலமாம் சொலின் குரவ ஈந்திடாய்.

75 ஈனராகிலும் இழிவு சேர்குலத்
தானராகிலும் உருகுவாரெனில்
வான நாடதில் வதிவராமெனக்
கானம் ஓதினாய் கவின்சொலீசனே.

76 ஈசனார் எழில் இனிய தாளெனும்
தேசுலாம் கனி தினவும் வல்லிரோ
நேசரே எனும் நிறையுமாமொழித்
தேசிகா எனைச் சிறிது நேசியாய்

77 சிறியதாம் வழிச் சேர்ந்திடாதருள்
நெறியில் நீ இனி நேர்ந்திடாயெனும்
குறியனே மொழிக் கோவெனும் உனை
அறியவே எனை ஆண்டுகொண்டவா.

78 ஆண்டுவாழ்வருள் அரிவைபாகனார்
ஈண்டு சார்ந்தெனை எளிதில் ஆளவும்
தாண்டுவாய் கொலோ சொல்லின் வேந்தனே
பூண்டுவாழ்வன் நின் புகழின் சேவடி.

79 சேவையால் மனம் தெருளுமாறருள்
பூவைபால் உளம் புகலுறுதருள்
பாவை பாகனர் பதமரு நிலை
நாவையான்மனு நயந்து நாடினேன்.

80 நாடினர் உளம் நணுகு நாதனை
ஆடிநாள் தொறும் அருள்செய் பாதனைக்
கூடிநானுறக் குறுகியேவுனைப்
பாடினேன் தமிழ்ப் பணிசெய்காவலா.

## வேறு.

81 பணியணி ஈசனர் பண்டுமேயருள்
மணியணி வாசகர் மாற்றமோடுமுன்
அணி தமிழ் ஓதுவர் ஆற்றலார்பவப்
பிணி தனை நீங்குவர் பேச்சின் வேந்தனே.

82 தனைவிடு மாகடல் தன்னை நீந்திமுன்
வினைவிடு நாவின்நல் வேந்தனேபெரும்
கனைகடலாகுமென் கவலை தீர்தர
உனைவிட வோர்துணை ஓர்ந்திலேனரோ.

83 ஓர்வதும் உன்கழல் உணர்வதும் அதே
தேர்வதும் உனதமிழ் செழுஞ்சொல் வேந்தனே
தீர்வதென் வினைவலி திரிந்திடாதினிச்
சார்வதுன் அடியவர் தழைகுழா மதே.

84 குழுவெனிற் கோவுனைக் கூடுவோர்களே
மழுவினை ஏந்திடும் மாதொர் பாகனைத்
தழுவிய தோர்மனம் தாங்குவோய் தமிழ்
அழகுறு நாவிறை ஐயபோற்றினேன்.

85 போற்றி நானுனைப் புகலடைந்தேனெனை
ஏற்றி மேற்கதி எளிதினிலீகுவாய்
நீற்றினுல் எழில் நிறைதரு மேனியாய்
தேற்றி நான்மறை தெளிக்கு நாமனு.

86 தெளிவுறு தீந்தமிழ்த் தேனை ஆனெனயைக்
களிவுறு பாவெனக் காதலால் மொழி
அளியுடையாய்சொலின் அரசனேயருள்
துளியெனும் ஈந்திடாய் தொல்வினையேற்குமே.

87 தொல்வினை போயிடத் தூர்த்தனேன்செயும்
பல் வினைப் பாவமும் பறைந்து போயிடச்
சொல் வல வேந்தநின் சுருதி கூறிடும்
நல் வழி நாடிநான் நயந்து வாழ்வனே.

88 நயமலி பாற்றமிழ் நாதனேயொரு
வயமலி வான்பரி வந்தநாயகற்
குயமலி பத்திசெய் உன்னையோதிடில்
சயமலி முத்தியிற் சார்தல்ஆம் அரோ.

89 அரஹரநாதனென் றரற்றி நாளுமே
சிரகர மேந்திமுன் சிரித்துமே யழும்
பரனடியார்களின் பாவல நாதனே
புரமெரி நாதனைப் புந்திசேர்த்தவா.

90 தவமலி மாதினித் தாயின்சேயனே
உவமையிற்காழியில் ஓங்குஞானமார்
சிவமலி போனகச் சேயின்நேயனே
நவமலி தீந்தமிழ் நாத போற்றியோ.

## வேறு

91 போற்றியுனைத் தாம்புகழும் புலவர் நாவிற்
பொழிதமிழால் நீராடும் புனிதர் கோவே
நீற்றினையும் மேனிதனில் நிறையப் பூசி
நெஞ்சதனில் நேசமதை நிறுத்திட் டென்றும்
கூற்றினையார் வினைகள்தமைக் கொன்றே மேலும்
கூடலிலா வண்ணமவை குழகன் தொண்டே
ஆற்றியருள் தேனதனை அரிதின் மாந்தி
அமர்ந்தமொழிக் கரசவுனை அடைந்திட்டேனே.

92 அடைந்துதிரு வதிகைதனில் ஆர்ந்திட் டன்னை
அனையதமக் கையர்மகிழ்ந் தருளும் நீற்றை
உடைந்த மனம் நெகிழ்ந்துருக உவகை பூப்ப
ஓங்குமுடல் முழுவதிலும் ஒளிரப்பூசிக்
குடைந்தாடிச் சிவபெருமான் கோயில் தன்னில்
கூற்றுய வாறொழிக்கக் கூவிப் பாடிக்
கடைந்த கடல் அமுதமெனும் கருணைத் தேனைக்
காலமெலாம் நுகர்ந்தமொழிக் காவல்லோனே.

93 வல்லவராம் தீயமணர் வாழ்வின் மீட்பான்
வந்தகொடுஞ் சூலையினல் வாடா தேகிப்
பல்லவன்செய் சூழ்ச்சிகள்தாம் பலியாதோடப்
பாட்டிசைத்துச் சிவபெருமான் பாலே சார்ந்து

நல்லவனுய்ப் பல்லவன் பின் நயந்து போற்றி
நாடதனிற் சிவத்தொண்டு நாளும் செய்து
செல்லவுயர் கதிக்கவனைச் செய்தாய், தூய
செந்தமிழின் மன்னன் எனும் சீரார் தேவே.

94 சீராரும் அடியவரைச் சிறப்பித் தேற்றிச்
செந்நெறியில் முத்திதனிற் சேர்க்கும் ஏணி
பாராரும் இடர்க்கடலுள் பதைக்கின் றூரைப்
பண்புடன் அக் கரைசெலுத்தும் பாங்கின் தோணி
வாராரும் கூந்தல்உமை வளரும் பாகன்
வண்மைதயா மூலமெனும் வளமார் தன்மன்
ஏராரும் மதிமுடியின் எம்மான் என்றே
இனிதுரைத்த சொல்லரசே எங்கள் கோவே.

95 கோவேயுன் திருமலியும் கோவில் தன்னைக்
கூடாதார் வினைகள் தமைக் கூடா நிற்பர்
நாவேயுன் நற்பெயரை நவிலா தாகில்
நஞ்சடைந்த நாவெனத்தான் நலிந்தே நையும்
பூவேயோன் றிட்டுன தாள் போற்ருக் கைதான்
பொய்யரிடம் ஐயமதைப் புகழ்ந்தேற் ருேயும்
தேவேநின் தொண்டுதனைச் செய்யாத் தேகம்
செத்தபிணம் என்றறிவேன் செஞ்சொல் வேந்தே.

96 தேருத சிந்தையனுய்த் திரிந்திட் டெய்த்த
சிறுவன் எனை அருநெறியிற் சேர்ப்பித் தானை
ஆருத ஆனந்தத் தடியார் செய்த
அனுசாரம் பொறுத்தருளி அவர்மேலென் றும்
சீருத பெருமானைச் செம்பொற் குன்றைச்
சிந்தைமயக் கறுத்துதவும் சிவனுர் தம்மைக்
கூருத நாள் உலகிற் கூடா நாளாம்
கூறுகின்றேன் என்றமொழிக்கோவே காவாய்.

97 வாய் மகிழ்ந்து நனிநமச்சி வாயா வென்னும்
வாய்மைதனை உரைத்தவர்கள் வாழ்வார்விண்ணில்
போய் மகிழ்ந்தென் றுரைத்திடுநின் போதம் கண்ட
புன்மையனேன் நன்றதனைப் புகலப் பெற்றேன்
தேய் மதியார் சிவனடியே சேரப் பெற்ருேம்
சென்றுநாம் சிறுதெய்வம் சேரோம் என்றே
தூய்மையுடன் நீயுரைசெய் துணிவும் ஓர்ந்தேன்
சொல்லரசாம் வல்லவனே துணையில் லேனே.

98 ஏரிநிறை செல்வமெனும் இயல்பான் தன்னை
இன்னடியார் வேண்டுவதே ஈவான் தன்னை
ஆரியனும் தமிழனும்நன் ருனன் தன்னை
அருமறையும் மூத்தமிழும் ஆவான் தன்னை
வாரிமதக் களிற்றுரிவை வாங்கிப் போர்த்த
வழித்துணையை மழபாடி வயிரத் தூணை
நாரிமகிழ் இடத்தானை நாவின் வேந்தன்
நயந்துரைசெய் அருந்தமிழை நயந்தேன் மாதோ.

99 மாதுமனம் வாடலின்றி வைக்கும் அடி
மற்றெவரும் அழகெழுத மாட்டாவடி
நாதனவன் திருவடியை நயந்தே நீயும்
நல்லூரிற் சூட்டிடத்தான் நன்றே பெற்ருய்
தூதன்எனச் சென்றசிவன் தோன்றிக் கட்டுச்
சோறளிக்க வுண்டனைநீ சொல்லின் தேவே
பாதகர்கள் அமண்மறைத்த பரமன் கோலம்
பழையாற்றில் வீரமுடன் பார்த்திட் டாயே.

100 பார்ப்பதற்குன் நீறணிந்த பழமார் மேனி,
பகர்வதற்குன் உழவாரப் படைகள் கண்டாய்
ஆர்ப்பதற்கும் ஏழிசையால் அறிந்தே பாடி
அரியதிருத் தாண்டகமாய், அணிந்தே சூடிச்
சேர்ப்பதற்கென் சிரமிசையுன் செம்மைத் தாளாம்
சிந்தைதமழை நீர்பொழிகண் செஞ்சொற் கோவே
தீர்ப்பதற்கென் வினையை யுன்றன் திருவார் நாமம்
செப்பிடுதல் என்றறிந்தேன் செய்வாய் நின்சீர்.

**திருநாவுக்கரசர் பதிற்றுப்பத்தந்தாதி**

**முற்றிற்று.**

திருச்சிற்றம்பலம்

திருவாசகமணி

## கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்களால்

இயற்றப்பெற்ற

## நூல்களின் விவரம்.

**தமிழ் :**

1. கீதத்தமிழ்
   100 தமிழ்க் கீர்த்தனங்கள் கொண்ட இசை நூல்
2. திருத்தொண்டர் கீதம்
   75 சைவ நாயன்மார்கள் பற்றிய கீர்த்தன நூல்
3. சிவாலய கீதம் ... (அச்சில்)
4. மாணிக்கவாசகர் மாலை
   100 செய்யுள் கொண்ட நூல்
5. திருப்போரூர்ச் சதகம்
6. திருநாவுக்கரசர் பதிற்றுப் பத்தந்தாதி
7. திருப்பழநி வெண்பா அந்தாதி
8. பட்டாலி வேலன் வெண்பா அந்தாதி
9. வடபழநி வடிவேலன் திருப்பதிகம்
10. திருமுல்லை வாயில் திருப்பதிகம்
11. கள்ளழகர் திருப்பதிகம்
12. தில்லைக் காளித் திருப்பதிகம்
13. குமரகுருபரர் திருப்பதிகம்
14. குடந்தைத் திருப்பதிகம்

**ஆங்கிலம் :**

1. South Indian Celebrities ... Vol. I
2. " " ... Vol. II
3. Saiva Siddhantam—A Short Study
4. Translation in English of
   St. Manickavasagar's Tiruvasagam.
   (To Be Published)

கலைமகள் - காரைக்குடி